உ

DR.

ரீஅந்துணை

வேலும

ெ சன்னைக்

ச்சபே சர் பஞ்சரத்நம்

ச ௌ ந்தரா ரயகி மாலை.

செங்கல்வராயர் பஞ்சரத்நம்.

கீ—— த்தநங்கள்.

இவை

ஷை கச்சபேசர் ஆலயத் தருமகர்த்தராகிய

# த. வேங்கடாசலசெட்டியார்

விருப்பத்தின்படி

திருமயிலை, வித்துவான்

# சண்முகம்பிள்ளையால்

இயற்றப்பட்டு,

காஞ்சீபுரம்

# மாதவராயமுதலியாரால்

சென்னை:

வே. நா. ஜூபிலி பிரேசில்

பதிப்பிக்கப்பட்டன.

---

கர௵. சித்திரை மீ.

## சிவஞானமுனிவர் வணக்கம்.

பூவடு வண்டுறைப் பொழில்சூழும் பொன்னிற
டாவடு துறைச்சிவ ஞான மாதவன்
சேவடி பாவுதூஉஞ் சித்திபெறற் பொருட்டே.

---

## குரு வணக்கம்.

பார்சான்ற நால்வேதப் பயனென்ன நிலவுபான்
றொண்டர் சீர்த்தி
கார்சான்ற வுளத்திமையக் களித்துமயற புத்தாண்ட
ஞான வாழ்வை
ஏர்சான்ற திருத்தணிகாற் றுப்படைக்கோ ரகலவுரை
யினிது செய்த
சீர்சான்ற தென்புரைசைச் சபாபதியாங் குருமணியைச்
சிந்திப் பாமால்.

---

## நேரிசைவெண்பா

மன்னுங் கரவருட மாதமே டக்தேதி
யுன்னுமீ ராறென் றுயர்சோதி—சென்னைவளர்
நம்பால்வ னன்கச்ச பேசப் பிரானலஞ்சால்
கும்பாபி டேகதினங் கூறு.

---

உ

வேலுமயிலுந்துணை.

சென்னைக்

# கச்சபேசர் பஞ்சரத்நம்,

## காப்பு.

வஞ்சித்துறை.

தும்பி முகத்தவன் - அம்பது மத்தான்
நம்புதி நெஞ்சே - துன்பம றற்கே.

பன்னிருசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சீர்கொண்ட கடல்கொண்ட நிறமேவு மாயவனு
நீண்மல ரிருக்கைகொண்டு
நிலவுமிரு திணையுயிர் வருக்கம்வினை கொண்டாங்கு
நெறிமையின் விதிக்குமயனும்
கூர்கொண்ட நுனைவச் சிரப்பகழி கொண்டன்று
கொடியவல னுயிர்கொண்டவக்
குரிசிலு முனக்கேவல் செய்குவா ரெனின்மிகக்
கொடியனுன தடிமையன்றோ
தார்கொண்ட மதிமுடி யொருத்தனே யன்பர்நெஞ்
சகமேவு மணிவிளக்கே
சனகர்முத லறிஞருள மாசுதீர்த் தாணிழல்க
வின்றுண்மை தனையளிக்கும்
வார்கொண்ட கனதனக் கங்கையாள் முடிமேல்
வயங்கிடுஞ் சென்னைவாழ்வே
மலைபெற்ற தேசிமகிழ் தருசிற்ச பேசவருள்
வளர்கச்ச பேசமணியே. (க)

மைக்குழல் சிலைப்புருவ மதிநெற்றி யிதழ்விழி
வண்குமிழ மலர்நாசிகண்
மழைவாய் மலர்க்குமுத மணிமுத்த முறுவல்முக
மலர்செவித் துணைவள்ளைசொல்
இக்குமிட றெழில்வளை யிணைக்கலச முலைவே
யிரும்புய மிணைக்கைகவனசம்
இடையரவு தொடையிலைக் கதலிமல ரடியென
வியம்பிமட வார்ப்புணர்ந்தே
இக்குவல யத்திலிட ருற்றுநனி யேங்குமிவ்
வேழையே னைக்கடவிநின்
றின்னலுற லென்னடித் துணைநாடு மென்றொருசொ
லின்றினிது நல்குகண்டாய்
மைக்கரு மிடற்றமுத மேயறம் வழாதொன்று
மருவிடுஞ் சென்னைவாழ்வே
மலைபெற்ற தேசிமகிழ் தருசிற்ச பேசவருள்
வளர்கச்ச பேசமணியே. (௨)

ஆணவ மலதிறற் கட்டுண்ட வுயிர்கட்
கதிர்ந்தனு வாதிநான்கும்
அளித்தவை யனைத்துஞ் சுதந்தரம தன்றென்ன
வருமறைநெறியோ டாகமங்கள்
வேணவா வொடுநல்கி யன்னவற் றின்வழி
விளைந்தொழு கிடப்பணித்தும்
விழலனே னவ்வழியி னொழுகாது நாள்கள்பல
வீணிற் கழித்தொழிந்தேன்
வேணுபுர நண்ணிய சிவக்கன் றழைப்பால்
விழைந்தருத் தக்கனிந்தம்
மேதாவி செந்தமிழ்த் தொடைபாட மிக்கமகிழ்
மேவியருள் செய்பரமே
மாணமை நெடுஞ்செல்வ மனைவளம் பில்கிடும்
வயங்குறுஞ் சென்னைவாழ்வே
மலைபெற்ற தேசிமகிழ் தருசிற்ச பேசவருள்
வளர்கச்ச பேசமணியே. (௩)

வெண்ணெய்நல் லூர்ப்பெரும வாரூர ரைன்று
விழவயரு ஞான்றணைந்து
விள்ளருஞ் சைவமறை யோர்கழக முணராம
வியன்கழற் கடிமையென்றே
கண்ணிப் புகன்றவற் கிருமணம் புணர்வித்து
நம்பிநந் தோழனென்றே
நாட்டியெம் போல்வார்கள் வினைவீட்டி டும்யாண்மை
நாயினேன் புகலவற்றே
புண்ணியப் பொடிபூசு மன்பாள நெஞ்சமே
பூங்கோயில் கொண்டபிரசே
புனிதமறை நாலுமோ லிட்டுமறி வரிதாய
பூனதச் சிகாமலையே
மண்ணின்மிசை யிந்த்ரதிரு வத்தினர்கள் வாழ்க்கையா
மருவிடுஞ் சென்னைவாழ்வே
மலைபெற்ற தேசிமகிழ் தருசிற்ச பேசவருள்
வளர்கச்ச பேசமணியே. (௪)

கருணனீ யொருபெருந் துறையிற் குருந்தநிழ
லுற்றுநின் னடியருக்கி
நின்றதிரு வாதவூ ராளிக்கு நரிபரி
நெடுஞ்சிர னெருடப்பத்
திருவிளை கூடற் பதிக்கே கொணர்ந்தனை
சிவந்தபங் கேருகத்தோன்
திட்டிய புழுத்தலைய னேனையுங் கூடென்று
சேவடிக் காளாக்குவாய்
அருமந்த மொழியினன் மறுமின்மறைகள் பூசித்த
வணிமணிக் கதவந்திறத்
தாண்டவா சளமகிழ் தாக்கயிலை யையா
றடைந்திடக் காட்டுமருதே
மலருற்ற மலர்நீடு பொறிவேறு பதவிசை
வயங்கிடுஞ் சென்னைவாழ்வே
மலைபெற்ற தேசிமகிழ் தருசிற்ச பேசவருள்
வளர்கச்ச பேசமணியே. (௫)

கச்சபேசர் பஞ்சரத்நம் முற்றிற்று.

வேலுமயிலுந்துணை

# சென்னைச்

# சவுந்தரநாயகிமாலை.

கட்டளைக்கலித்துறை.

சீர்பூத்த முக்கட் சிவபெரு மானிடஞ் சேர்ந்தமின்னே
பார்பூத்த வெங்கள் பராபரை யேயென்றுன் பாதமலர்
ஏர்பூத்த செஞ்சினி னூடும் வரமொன் றினிதருள்வாய்
நார்பூத்த வன்பர்சொல் சென்னைச் சவுந்தர நாயகியே. (௧

காவையின் மேவிய கற்பக மேயைங் கரனைநல்கும்
பூவைநின் கான்மல ரென்ஞான்று மேத்தும் புலம்பெறுவான்
சேவைவான் கூறும் பிரானிட மேவிய தெய்வப்பெண்ணே
காவை யளித்திடு சென்னைச் சவுந்தர நாயகியே (௨

மண்ணன னீர்வான் வளிமுத லாயமா பூதமென
எண்ணநிற் கும்பரா யேநின தாட்கன்பில கேய்வதின்றிப்
புண்ணியத் தெள்ளமு தேபல நாளவம் போக்கினனால்
நண்ணுவ தென்றுனைச் சென்னைச் சவுந்தர நாயகியே. (௩

வாளொன்று கண்ணியர் மையலி லாழ்ந்துன் மலரடிக்கே
யாளென் றிருக்க வருளுகண் டாயல்லை யாயினின்றன்
றாளொன்று மெய்யன்பர் தம்பா லடைந்தவர் தம்பணிசெய்
ஆளொன் றினிதருள் சென்னைச் சவுந்தர நாயகியே. (௪)

பவமேகொண் டிங்குழன் றேனென்செய் கேன்செம் பவள
சிவமே மகிழுந் திரிபுரை யேயுனைச் சிந்தைசெயா [வெற்பாஞ்
தவமே பெருக்கிநன் னாள்கழிக் கின்றன னைநினருள்
நவமே யளித்திடுஞ் சென்னைச் சவுந்தர நாயகியே. (௫)

அஞ்செழுத் தின்முப் பொருளுண்மை காட்டி யடிமலரென்
னெஞ்சத் திருத்துவ தென்றோ வறிவில னித்தனங்கள்
மஞ்சிவர் மாடச்சென் னைக்கச்ச பேச மருவிநிற்குங்
கஞ்சணி கண்டன் மகிழுஞ் சவுந்தர நாயகியே. (௬)

மலையான் றவஞ்செய்து பெற்றவன் னைவண் கருப்புருவச்
சிலையான் றனக்கர சியும்பொன் னைசெஞ் சடாடவிமேற்
கலையான் றனக்கின்ப நல்குமின் னையுனைக் காட்டினையேல்
நலையா யினைசென்னை மேவுஞ் சவுந்தர நாயகியே. (௭)

கூட்டங்கொண் டைவர் வருத்தித் தொலையக் குலைந்துமன
வாட்டங்கொண் டேங்குகின் றேனினி நீயுன் மலர்க்கமலத்
தாட்டங்கு நெஞ்சகத் தன்பர்தம் பாற்பணி தான்செயுநன்
னாட்டந் தருதிகண் டாயஞ் சவுந்தர நாயகியே. (௮)

வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை யென்ற வியன்மொழி
ஈண்டறிந் தெற்கப் பொருணிலை யெய்த விரங்குகண்டாய்[வைய
தூண்டல்செயாத மணிவிளக் கேகிற் றொழார்களன்றே
நாண்டுறந் தார்சென்னை மேவுஞ் சவுந்தர நாயகியே. (௯)

அருளாவ தொன்ற றுயிர்க்கோறல் செய்யா வறமதென்றே
பெரியா ருரைத்த துணிபெனின யானிப் பிறக்கைதயினில்
விலையாவந் நல்லற னுடவெஞ் ஞான்றும் விளக்குகண்டாய்
கலையா னுடையான் மகிழுஞ் சவுந்தர நாயகியே. (௧௦)

சவுந்தரநாயகிமாலை முற்றிற்று.

வேலுமயிலுந்துணை.

சென்னைச்

# செங்கல்வராயர் பஞ்சரத்நம்.

பன்னிருசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கங்கைமதி யஞ்சடை பொறுத்தமுக் கட்பிரான்
கமலனங் கலயமுனிவன்
கலையெலா முணரும்ப ராசரன் சிறுவரிவர்
கடவுண்மெய்ஞ் ஞானமுணர்வான்
செங்கையிற் சின்முத்தி ரைக்கொண் டுணர்த்துநின்
சேவடித் துணைகளென்றும்
சிறியனேன் பற்றித் துதித்துநின் றேபவச்
சிறையொழிவ தென்றோசொலாய்
ஐங்கர வனைத்தம்பி யாவரா கினுந்தெங்க
ளன்னைவள் ளியைமணந்த
அறுமுகத் தெள்ளமுத மேகருணை வடிவமே
யனந்தசூ ரியருதயமே
செங்கமலை வாழ்க்கையாஞ் சென்னையிற் கச்சபே
சந்திகழு வந்தவாழ்வே
திங்கடவழ் மனகரத் தெங்களுக் கருள்வரு
செங்கல்வ ராயமணியே (௧)

அன்னையொடு தந்தைநீ மைந்தனென் குரவனீ
யன்புமிகு சீடனடியேன்
அனைத்துயி ரையும்புரந் தருளுமிறை நீயென்ற
னடிபரவு மடிமையானேல்

பன்னரிய மறையெலா மோலிட்டு முணர்வரிய
பண்பநின் னேவல்செய்யும்
பாக்கிய மளித்தென்னை யஞ்சலென் றொருமொழி
பரிந்துரைத் திடுவதென்றோ
மன்னவி ரயிற்படையி னன்றன்றில் வெற்பெறியு
வேழமுக மேயவவுணன்
வீற்றழவீற் றெய்தத் தடிந்தண்ட ராக்காத்த
வீறுமெய்ஞ் ஞானநிலையே
தென்றலி னிருக்கையாஞ் சென்னையிற் கச்சபே
சந்திகழ வந்தவாழ்வே
இங்கடவுழ் சினகரத் தெங்களுக் கருள்வரு
செங்கலவ ராயமணியே. (உ)

கல்லாத புல்லனேன் கயவனேன் வறியனேன்
கருணைசிறி தேனுமில்லேன்
கற்றவர்கள் கழகமே சேர்ந்திலாத் தீயனேனை
கந்தநின றொண்டர்தமையே
புல்லாது மடமாத ரினமேவி யவர்தரும்
போகமே பொருளதென்று
புந்தியி னினைந்ததுன் னருளறியு மெனையுமே
புரைதவிர்த் தாள்வதென்றோ
மெய்யான பெரு மானந்த நிலையமே மிக்கபர
துரியமுடி வினிலிலங்கும
துணையே மயிற்பரியு கைக்குமரு ளமுதமே
சோதிவடி வேற்கையரசே
செல்வமார்ந்த பொழிலீடு சென்னையிற் கச்சபே
சந்திகழ வந்தவாழ்வே
இங்கடவுழ் சினகரத் தெங்களுக் கருள்வரு
செங்கல்வ ராயமணியே. (௩)

முருகவென் றேசொல்லி நின்றவேந் திழைநீரன்
முத்தமிழ்க் கும்பமுனிவன்
மூதுணர்வு பெற்றநல் லருணையங் கிரிநாதன்
முக்கனி யெனத்தமிழ்சொலுங்

தெரிவெய்து குமரகுரு பரமுனிவ னன்புருச்
சிற்றம்ப லவன்மெய்ஞ்ஞானச்
சிதம்பர சுவாமிமுத லாம்பெரியர் தம்மையே
சிந்தைதனி லுடைவருளாய்
மருமலர்ச் சோலைசெறி கந்தகிரி செந்திலெழில்
மலிசோலை மலையேரகம்
வண்சமர புரியாவி னன்குடி பரங்கிரி
மலைத்தணிகை முதலமேவித்
திருவளர் மாடமார் சென்னையிற் கச்சபே
சந்திகழ வந்தவாழ்வே
இங்கடவுழ் சினகரத் தெங்களுக் கருளவரு
செங்கல்வ ராயமணியே. (௪)

பதிவேண்டு மன்பர்தம் பாலடைந் தவரேவல்
பண்ணுமெய்ப் பண்புவேண்டும்
பத்தியின் பால்வேண்டு மாதரா ரின்பமே
பரிகரித் தடையவேண்டும்
நீதிவேண்டு மென்னையொன் றேற்குநர்க் கிலையென்று
நினையாம லுதவவேண்டும்
நிரந்தரமு னதுகோ விலைவலம் வந்துன்னை
நேயமொடு பாடவேண்டும்
கதிவேண்டு மென்றுன்னை யடையுமன் பினாகன்றாட்
கஞ்சமே பணியவேண்டும்
கன்னனிகர் தனவசிய குலமணிற் றம்புவேங்
கடாசல மகிப னேத்துந்
திதிவேண்டு மால்பரவு சென்னையிற் கச்சபே
சந்திகழ வந்தவாழ்வே
இங்கடவுழ் சிகைரத் தெங்களுக் கருளவரு
செங்கல்வ ராயமணியே. (௫)

செங்கல்வராயர் பஞ்சரத்திநம் முற்றிற்று.

உ

வேலுமயிலுந்துணை.

# கீர்த்தநங்கள்.

---

இராகம் - கேதாரகௌளம், அடதாளம்.

பல்லவி.

இன்னமுனக்கென்மேல் இருப்பதென்னவஞ்சகம்
இரங்கவேண்டு முன்னகம்

அனுபல்லவி.

கன்னல்வின் மாரனைக் காய்ந்தகச்ச பேசனே
கமலை பரவுஞ்சென்னை மேவும்மை போகனே (இன்)

சரணங்கள்.

உன்னை யடுத்துநான் வருந்து வதுதர்மமா
உனக்கெவ ரேனுந்தான் போதித்த மர்மமா
என்னசெய் திடுவேனான் முன்செய்த கர்மமா
என்முன் மலைபோல்நின்று தாக்குவதும் வர்மமா (இன்)

நான்படும் பாடென்னா லுரைத்திட முடியாதே
நானுரைத் தாலுமஃ தின்றேதான் விடியாதே
என்னைகைவிடு கின்றாயென் றுரைக்கக் கடியாதே
இதய மறிவேனுனக் கினியேனுந் தடையாதே (இன்)

சுந்தரன் றமிழ்க்கன்று தூதுபோன பிரக்யாதா
சுத்த நிராதார மானசுந் தரபாதா
ஜெயந்தன்சண் முகன்றமிழ்க் காதார மானநாதா
மன்னுயிர் குறைகேட்டே யிரங்குந்தோ டைக்காதா (இன்)

---

இராகம் - அடாணா, ஆதிதாளம்.

பல்லவி.

தாயே - எனக்கிரங்காயே - அதிசவுந்தரவல்லித்
தாயே - எனக்கிரங்காயே.

அனுபல்லவி.

மாயனேத்துஞ் சென்னைக் கச்ச பேசந்தன்னில்
மன்னுயிர்க் கருள்செய வந்த க்ருபாகரி (தாயே)

சரணங்கள்.

நீலமால்சகோ தரிகாத்யாயனி
நிர்மலி திரிசூலி - வெகு
நிகமாகமசம் பன்னிபராபரி
நிர்க்குணி யதிசீலி
காலகாலிநீல சுந்தரியாரணி
கருணைகரிபூரி பூரணிநாரணி (தாயே)

சக்ரஹஸ்திசிவ சாம்பவியந்தரி
சகலலோக ஜனனி - சிவ
சங்கரிவேதவே தாந்தபராம்பரி
தல்விசலச நயனி
விக்ரமவீரிகல் யாணிதிரிநேத்ரி
விமலிசிதம்பரி வெகுசனதோத்ரி (தாயே)
சப்தகோடி மஹா மந்த்ரரூபிதா
க்ஷாயணி சிவகாமி - சுந்
தரிகிரிராச குமாரிசிரந்தரி
தருச ஹஸ்த்ரநாமி
பக்தன்சண்முகன் தமிழ்க்காதாரி
பரமேஸ்வரிசிற்பரி கவுமாரி (தாயே)



இராகம் - காம்போதி, அடதாளம்.

பல்லவி.

செங்கல்வராயனடி சிந்திப்பார்தம்மையே
சிந்தைசெய் மடநெஞ்சமே

அனுபல்லவி.

திங்கள்தவழும்மணி மாடஞ்செறியுஞ்சென்னைச்
செல்வக்கர்சபேசர் திகழவருமருட் (செங்)

சரணங்கள்.

அன்ப ராவலை படையினி னிதந்தேடு
அவர்வெள்கு வனவற்றை யறிந்துந விடாது
துன்பப் பிறவியெனநே கினைந்தாபிட் டடையக்கூடு
துரிய முடிவேசுகங் கருபிட மிலைக்கேடு
(செங்கல்வ)

சிவகாம தீர்த்தருஞ் செய்யபுர வேதேட்டம்
சிந்தித்திடு மெய்யன்பா நெருங்கும் பெருங்கூட்டம்
அவமோட்டி மெய்ஞ்ஞான மளிப்பது வேநாட்டம்
ஆகவிருந் தாலுனக் கிலையினி மனவாட்டம்
(செங்கல்வ)

அரிவையர் மயக்கினி லழிவது வெகுதொல்லை
அனைத்துயி லாயுநின்போ லெண்ணினாற் குறையில்லை
வினாவிற் சண்முகனன்பா யெடுத்துவாக் குஞ்சொல்லை
வீணென்று கொண்டுநீ டழிகின்றாய் வினைக்கெல்லை
(செங்கல்வ)

கீர்த்தனங்கள் முற்றிற்று.

---

ஸ்ரீ சிவஞானயோகிகள் சேவடி வாழ்க!